**OPEN ACCESS**

Manuscript ID:
TAM-06022021-4410

Volume: 6

Issue: 2

Month: October

Year: 2021

P-ISSN: 2454-3993

E-ISSN: 2582-2810

Received: 17.08.2021

Accepted: 22.09.2021

Published: 01.10.2021

Citation:
Sahaya Darcius, P. "A Research on The Etymology of Dravidam (Dravidianism)." *Shanlax International Journal of Tamil Research,* vol. 6, no. 2, 2021, pp. 22–35.

DOI:
https://doi.org/10.34293/tamil.v6i2.4410

*Corresponding Author:
darciuspsahayam@gmail.com





# A Research on The Etymology of Dravidam (Dravidianism)

**P. Sahaya Darcius**
*Software Researcher, South Korea*
http://orcid.org/0000-0002-6143-027X

**Abstract -** There have been numerous critics found in Tamil Nadu since the introduction of the phrase 'Dravidam'( Dravidianism). The criticism on 'Dravidam' was at its peek when DK ( Dravida Kazhagam), Dravida Nadu, DMK ( Dravida Munnetra Kazhagam), were very popular among the masses of Tamil Nadu. There is a general opinion that Bishop Robert Caldwell was the first to use the word Dravidam. There are also stories saying Dravidam is not Tamil and Dravidians are not Tamils. Therefore, it is natural for anyone to question the verity of Dravidam. Is Dravidam an illusion? Or is it a fabricated story? With these questions in my mind I started researching the Sangam Literature and the historical documents extensively. I have found a plethora of evidence confirming Dravidam and Tamil are not different. Dravidam is Tamil and Tamil is Dravidam

**Keywords:** Dravidam, Dravidianism, Dravidar, Dravidian, Tamil, Tamilar, Sanga Tamil, Endonym, Exonoym, Bishop Robert Caldwell, Brahminism, Dravida Bhasha, ,Andhra Dravida Bhasha, what is dravidam, Ariya, Ariyar, Hathigumpha Inscription, badami inscription, Prakrit, Sanjan Plates, Chera, Chola, Pndiya, Tamil Kings, Periplus of Erythraean sea. Ptolemy, Herodotus, Damirike, Damirica, Pancha Dravida, Dravidian Languages, Sanskrit, Dravida-lipi, Thamili, Tamili, Pandiyan Seppedukal 10, Rashtrakuta, Nayanapalle, Kumbhalgarh, Tiruppuvanam, Linguistic survey of india,G.A. Grierson,Sten Konow, Pavendar Bharathidasan,Agananooru, Tolkappiyam

## References

1. Tolkappiyam, Echchaviyal 4,5,6
2. Nannool 273
3. Moli Gnayiru Devaneya Pavanar - Oppiyan molinool2, page 15
4. Epigraphia Indica. Vol. 20, Published by The Director General, Archeologial Survey of India, 1983, page 79.
5. The Indian Antiquary a journal of oriental research Vol.IX, 1880, Edited by Jas, Burgess, pages 97 - 98
6. EPIGRAPHIA INDICA Vol 20, PRAKRIT INSCRIPTIONS FROM NAGARJUNIKONDA, pages 89 and 22
7. Journal of The Andhra Historical Research Society Volume X, pages 53, 54
8. Epigraphia Indica. Vol. 36, pages 36,62,66,193
9. Epigraphia indica, vol 18 (1925-26) Sanjan plates of Amoghavarsha 1, pages 241, 254
10. Periplus of the Erythraean sea, Translated from The Greek and Annotated By Wilfred H. Schoff,A,M, pages 44, 205, 213
11. What is Dravidam - V.E. Kuganaathan
12. Agananooru 396:16 -19, 336: 20 - 23
13. Silappatikaram
14. https://wiki2.org/en/Tamil-Brahmi
15. Dravidathaai, pages 8,9,15
16. Kaalamthorum Diravidam Ennum Sollatchi Thamilar Adaiyaalap Pinnani - Dr. Sa. Sinivaasan

17. Britannnica Encyclopedia of World Religions, page 142
18. Pandiyar Seppedukal 10, Ulaga Thamil Aaraychchi Niruvanam, 1999, pages 90, 91, 136,139
19. Epigraphia indica Vol 24, First and Third Slabs of Kumbhalgarh Inscription, page 309
20. Epigraphia indica Vol 27, Seals of Tiruppuvanam Plates, page 124
21. Epigraphia indica Vol 27, Nayanapalle Inscription of Ganapatideva, pages 195 - 197
22. Epigraphia indica Vol 5, page 73
23. Thaayumaanavar Paadalgal, Sittharkanam (10.3)
24. Paavendar Bharathidasan, Tamizhukkum Amudhendru Per, Paadal Dravidam
25. Linguistic Survey of India, Volume 4, G.A. Grierson, C.I.E, PhD, page 277
26. 1911 Encyclopedia Britannica, Volume 8, Dravidian by Sten Konow, page 551.
27. Ariyappadaatha Thamilmoli, Dr. Kannabiran Ravishankar

# திராவிடம்: ஒரு சொல் ஆய்வு

***பீ. சகாய டர்சியூஸ்***
மென்பொருள் ஆராய்ச்சியாளர், தென் கொரியா

***ஆய்வுச் சுருக்கம்***
*தமிழ்நாட்டில் திராவிடம் என்ற வார்த்தை புழக்கத்தில் வந்ததில் இருந்து அதை விமர்சனம் செய்வோர் உருவாகிவிட்டார்கள். சொல்லப் போனால், திராவிடர் கழகம், திராவிடநாடு, திராவிட முன்னேற்ற கழகம் போன்ற பெயர்கள் புகழ்பெறத் தொடங்கிய காலத்தில் இருந்துதான் இந்த விமர்சனம் தீவிரமடைந்தது. பொதுவாக, திராவிடம் என்ற வார்த்தையை கால்டுவெல் என்ற ஆங்கிலேய அறிஞர்தான் அறிமுகப்படுத்தினார் என்ற அளவில்தான் பேசுகிறார்கள். மேலும் திராவிடம் என்பது தமிழ் அல்ல. திராவிடர்கள் தமிழர்கள் அல்ல என்றும் கூறுகிறார்கள். எனவே, உண்மையிலே திராவிடம் என்பது அவர்கள் சொல்வது போல, திராவிடம் என்பது மாயையா? ஏமாற்று வேலையா? என்பதை அறிய சங்க இலக்கியங்களில் இருந்தும், வரலாற்று ஆவணங்களில் இருந்தும் தரவுகளைத் தேடினேன். எனது தேடல், தமிழும் திராவிடமும் ஒன்றே என்பதை குறித்துக் கூடுதல் ஆதாரங்களைக் கொடுத்திருக்கிறது.*

***முக்கியச்சொற்கள்:*** *திராவிடம், திராவிடநிசம், திராவிடர், திராவிடியன், தமிழ், தமிழர், சங்கத்தமிழ், எண்டோனிம், எக்ஸோனிம், பிஷப் ராபர்ட் கால்டுவெல், பிராமணிசம், திராவிட பாஷா, ஆந்திர திராவிட பாஷா, திராவிடம் என்றால் என்ன, ஆரிய, ஆரியர், ஹதிகும்பா கல்வெட்டு, பாதாமி கல்வெட்டு, பிரகிருதம், சஞ்சன் தட்டுகள் , சேர, சோழ, பாண்டியா, தமிழ் மன்னர்கள், எரித்திரியன் கடலின் பெரிப்ளஸ். டோலமி, ஹெரோடோடஸ், டாமிரிக், டாமிரிகா, பஞ்ச திராவிடம், திராவிட மொழிகள், சமஸ்கிருதம், திராவிட-லிப்பி, தமிழிலி, பாண்டியன் செப்பேடுகள் 10, ராஷ்டிரகுடா, நாயனப்பள்ளி, கும்பல்கர், திருப்புவனம், இந்தியாவின் மொழியியல் ஆய்வு, ஜி.ஏ. கிரியர்சன், ஸ்டென் கோனோவ், பாவேந்தர் பாரதிதாசன், அகநானூறு, தொல்காப்பியம்.*

## திராவிடம் - தமிழைக் குறித்த திசைச்சொல்

திராவிடம் என்ற சொல் முதலில் திசைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தமிழில் புழக்கத்தில் உள்ள இந்த திசைச்சொல் என்றால் என்ன?

**செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்**
**தம் குறிப்பினவே திசைச்சொல் கிழவி**

என்கிறது தொல்காப்பியம்.[1]

அதாவது, செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த பன்னிரண்டு திசை நாடுகளிலும், தாம் குறித்த பொருளை விளக்கி நிற்கும் சொற்கள் திசைச்சொல் எனப்படும்.

இடைக்காலத்தில் வாழ்ந்த நன்னூலாரும், தொல்காப்பியரை ஒட்டியே, பின்வருமாறு கூறுகிறார்,

**செந்தமிழ் நிலம் சேர் பன்னிரு நிலத்தினும்**
**ஒன்பதிற்று இரண்டினில் தமிழ்ஒழி நிலத்தினும்**
**தம் குறிப்பினவே திசைச் சொல் என்ப**
**என்கிறது நன்னூல் : 273.**[2]

அதாவது, செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு பகுதிகளிலிருந்தும், பதினெட்டு மொழி பேசும் நாடுகளில், தமிழ்மொழி பேசும் பகுதி அல்லாத பிற பதினேழு நிலங்களில் உள்ள மொழிகளிலிருந்தும் தமிழ் மொழியில் கலந்து வரும் சொற்கள் திசைச் சொற்கள் என்பது இந்த நூற்பாவின் பொருள்.

நன்னூலுக்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் திசைச்சொல்லைக் “கொடுந்தமிழ்” என்னும் தொடரால் குறிப்பிடுகின்றனர். ஆனால் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் திசைச்சொல்லைக் “திசைச் சொல்” என்றே குறிப்பிடுகின்றனர்.

தொல்காப்பியர், நன்னூலார், தங்களின் நூற்பாவில் செந்தமிழ் நாடு எது என்றோ, பன்னிரு கொடுந்தமிழ் நாடுகள் எவை என்றோ கூறவில்லை. இவை அவர்கள் காலத்தில் கற்றறிந்த பலரும் அறிந்த ஒன்றாக இருந்திருக்கலாம்.

இடைக்காலத்தில் தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச் சிலையார் ஆகியோரும், நன்னூலுக்கு உரை எழுதிய மயிலைநாதர், சங்கரநமச்சிவாயர் ஆகியோரும் அந்நாடுகள் எவை எனக் குறிப்பிடுகின்றனர்.

**தென்பாண்டி குட்டம் குடம்கற்கா வேண்பூழி**
**பன்றி அருவா அதன்வடக்கு நன்றாய**
**சீதமலநாடு புனல்நாடு செந்தமிழ்சேர்**
**ஏதமில் பன்னிரு நாட்டெண்**

என்ற வெண்பா வழி பன்னிரு நாடுகள் கீழ்க்கண்டவைதாம் என்று அறியப்படுகின்றன.

1. தென்பாண்டி நாடு 2. குட்ட நாடு 3. குட நாடு 4. கற்கா நாடு 5. வேணாடு 6. பூழி நாடு 7. பன்றி நாடு 8. அருவா நாடு 9. அருவா வடதலை நாடு 10. சீத நாடு 11. மலநாடு 12. புனல் நாடு

தமிழ் பேசப்படாத நிலம் 17 குறித்து நன்னூல் உரையாசிரியர் மயிலைநாதர் மேற்கோள்காட்டியுள்ள கட்டளைக் கலித்துறைப் பாடல்

**சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுக், குடகம்**
**கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம்,வங்கம், கங்கம்,**
**மகதம், கடாரம், கௌடம், கடுங்குசலம்**
**தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதி னேழ்நிலம் தாமிவையே.**

நால்வகைச் சொற்களுள் இயற்சொல் என்பது தமிழ்நாட்டில் வழங்குவது. எல்லா நாட்டார்க்கும் பொருள் இயல்பாகத் தெரியக்கூடியது. ஆனால் திசைச்சொல் என்பது எல்லோருக்கும் பொருள் விளங்கக் கூடியது இல்லை; எந்த நாட்டில் வழங்குகிறதோ அந்த நாட்டில் உள்ளவர்களுக்கு மட்டுமே பொருள் தெரியக்கூடியது.

உதாரணமாகத் தென்கொரியாவில் இந்தியாவை இந்தோ என்றும், அமெரிக்காவை மீகுக் என்றும், இங்கிலாந்தை யங்குக் என்றும், சீனாவை ஜுங்குக் என்றும் கூறுவார்கள். இந்தப் பெயர்கள்தான் திசைச் சொல் ஆகும். இந்த வார்த்தைகள் கொரிய மக்களுக்கு மட்டுமே புரியும்.

இதேபோல் தமிழ் மொழியிலும் சீனாவைக் குறிக்க சீனம். கிரீஸைக் குறிக்க யவனம், மலேசியாவைக் குறிக்க கடாரம், இந்தோனேசியாவை குறிக்க சாவகம் என்ற பெயர்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

இன்றைய மலேசியாவின் அன்றைய பெயர் கெடா (Kedah). அந்த ஒலிப்புக்கு நெருக்கமாகக் கடாரம் என்று தமிழர்கள் பயன்படுத்தினர். இன்றைய கிரீஸின் ஆதிக்குடி பெயர் அயனியன் (ionian) அதனால் தமிழில் யவனம், பின்னாளில் ionian, Graikoi, என்று மாறியது. அதைத் தமிழில் கிரேக்கம் என்று தமிழர் அழைத்தனர். இன்றைய இந்தோனேசியா அன்று ஜாவா (JAVA) என்று அழைக்கப்பட்டது. அதனால் தமிழில் சாவகம் என்றானது. அது போல இன்றைய சீனாவின் அன்றைய பெயர் சீன மொழியில், Zhongguo (ஜொங்குவோ), ஜொங்குவோ என்று நமக்கு

வாயில் வரவில்லை. தமிழில் அதற்கு எழுத்தும் இல்லை அதனால் சற்றே நெருக்கமான ஒலிப்போடு சீனம் என்று அழைத்தார்கள். இன்று சீனா என்றே உலக அளவில் ஆகிவிட்டது.

இங்கிலிஷ் என்பதை ஆங்கிலம் என்று தமிழில் எழுதுவது மூலமொழிக்கு நெருக்கமாகத் தான், இங்கிலாந்தின் ஆதிக்குடியின் பெயர் Anglo Saxon. அவர்களின் பேச்சு வழக்கில் Anglian. அதனால் அதற்கு நெருக்கமான ஒலிப்பில் தமிழில் ஆங்கிலம் என அழைக்கிறோம்.

இதற்கு ஆங்கிலத்தில் Endonym. மற்றும் Exonym என்று பெயர். Endonym – என்றால், மூல மொழியில் வழங்கும் ஒலிப்பு பெயர். Exonym – என்றால், உலகம் வழங்கும் ஒலிப்பு பெயர். தமிழ் இலக்கணத்தில் இதுவே திசைச் சொல் என அழைக்கப்படுகிறது.

நமது சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் கடல் வணிகத்தில் உலகஅளவில் கொடி கட்டிப் பறந்தனர். அந்தக் காலகட்டத்தில், தமிழ் என்று நமது சிறப்பு "ழ" கரத்தை ஒலிக்கவியலாத நம் நட்பு இனங்களால் தமிழுக்கு இன்னொரு பெயரும் கிடைத்தது அதுவே திராவிடம்!

திராவிடம் என்பது தமிழைக் குறித்த திசைச்சொல். அதானால்தான், நமது சங்க இலக்கியங்களில் திராவிடம் என்ற சொல்லாடல்கள் காணப்படுவது இல்லை. ஏனென்றால், நமக்கு தமிழ் என்று நன்றாக உச்சரிக்க வரும்.

நம் தமிழின் ழகரத்தை ஒலிக்க முடியாத நாடுகள் நமது மொழிக்கும், இனத்துக்கும் வைத்த பெயர்தான் திராவிடம் என்று மருவி நிற்கிறது. ஆக, உலக அரங்கின் தொன்மையான ஆவணங்களிலும், நூல்களிலும் திசைச் சொல்லாக திராவிடம் இருக்கிறது. இதையே, மிகச்சிறந்த தமிழறிஞரும், சொல்லாராய்ச்சிவல்லுநருமானமறைமலை அடிகளார் வழியில் நின்று தனித்தமிழ் இயக்கத்திற்கு சிறப்பாக உழைத்த, தமிழின் வேர்ச்சொல் வளத்தையும் செழுமையையும் சுட்டிக்காட்டிய தேவநேயப் பாவாணர் குறிப்பிடுகிறார்:

இக்கால மொழியியலும், அரசியலும் பற்றி தமிழும், அதனின்று திரிந்த திராவிடமும் வேறுவேறாகப் பிரிந்து நிற்பினும், பழங்காலத்தில் "திராவிடம்" என்றதெல்லாம் தமிழே. திராவிடம் என்று திரிந்தது தமிழ் என்னும் சொல்லே தமிழ் என்பது தான் - தமிழம் என்றும் - த்ரமிளம் என்றும் - த்ரமிடம் என்றும் - த்ராமிடம் என்றும் - இறுதியில் த்ராவிடம்" என்று வழங்கப்பட்டது என்று ஒப்பியன் மொழி நூல், பக்கம் 15ல் அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார் பாவாணர்.[3]

ஆரிய திராவிட நாகரிக வேறுபாடு

இக்கால மொழியியலும் அரசியலும்பற்றித் தமிழும் அதனினின்று திரிந்த திரவிடமும் வேறு பிரிந்து நிற்பினும் பழங்காலத்தில் திரவிடம் என்றதெல்லாம் தமிழே. திரா விடம் என்று திரிந்தது தமிழ் என்னும் சொல்லே.

தமிழ் - தமிழம் - த்ரமிள - திரமிட - திரவிட - த்ராவிட - திராவிடம்.

அதற்கு முன்னரே தமிழ் குறித்த திசைச்சொல் முதன் முதலில் "அத்திக்கும்பா" கல்வெட்டில் (Hathigumpha inscription, அதாவது, யானைக்குகை கல்வெட்டு) கிடைத்துள்ளது. அத்திக்கும்பா கல்வெட்டு, ஒரிசாவில் புவனேசுவரம் அருகே உதயகிரியில், அன்றைய கலிங்கப் பேரரசர் காரவேலன் என்பவரால் பொ.ஆ.மு. இரண்டாம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்டது.

இக்கல்வெட்டின் 11 வது வரியில் 1300 ஆண்டுகளாக முறியடிக்கப்படாமலிருந்த தமிழ் மூவேந்தர் கூட்டணியைக் காரவேலன் முறியடித்த செய்தி கூறப்படுகின்றது. இங்கு தமிழர் கூட்டணியினைக் குறிக்கும் திரிபுச் சொல்லாக "த்மிர தேக சங்காத்தம்" என்று பயன்படுத்தப்பட்டுள்ளது. இதில் T[r[amira (தமிர) என்பது தமிழினைக் குறிக்கும் திசைச் சொல் ஆகும் என்கிறது Epigraphia Indica. Vol. 20, பக்கம் 79.[4]

இதேபோல், கி.பி.6ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாதாமி தூண் கல்வெட்டு தமிழர்களை "திரவிள என்கிறது. சான்றாக, The Indian Antiquary a journal of oriental research Vol. IX, 1880, Edited by Jas. Burgess ன் பக்கம் 97-98ல் காணலாம்.[5]

நாகார்ஜுனகொண்டா பிராகிருத கல்வெட்டுகள், இதன்காலம் கி.பி.3 மற்றும் 4ஆம் நூற்றாண்டு. இதில் தமிழகத்தைத் தமில என்றே குறிக்கின்றது. சான்றாக, EPIGRAPHIA INDICA Vol 20, PRAKRIT INSCRIPTIONS FROM NAGARJUNIKONDA பக்கங்கள், 8, 9, மற்றும் 22ல் காணலாம்.[6]

The three words following Vanavāsi are uncertain. The first one can be hardly anything but Yavana, the *aksharas* ya and va being still legible. Next comes a name which I read tentatively as Damila, meaning the Tamil country. The third word seems to consist of three *aksharas*, the

சக்திவர்மன் செப்பேடுகள் வேங்கிநாடு மற்றும் சோழர்களுக்கு இடையேயான போரை திரமிளர் அல்லது திராவிடர் உடனான போர் என்றே Epigraphia indica, vol 36 பக்கம் 193, மற்றும் Journal of The Andhra Historical Research Society Volume x பக்கம் 53-54 ஆகியன குறிப்பிடுகின்றன.[7, 8]

*Śāsta* means the period of minority extending upto the age of sixteen. The event referred to, therefore, seems to have taken place when Śaktivarman had not completed his sixteen years. The Pabhuparru grant speaks of this battle as '*Dramiḷ-āhava*' or 'the battle of the Dramiḷas or Tamils'. The *Chaulika-raṇa* or *Dramiḷ-āhava* must be taken to mean 'a battle for the Chōḷas or Dramiḷas', rather than 'with the Chōḷas'.

Vol. X] CONJEEVARAM INS. OF KING JATACOLA BHIMA. 53

The record 'B' gives a similar account with some additional information. In the great battle with the Dramiḷas or Draviḍas (*Dramiḷ = āhavē*) who opposed him with a vast army of mighty elephants *Cāḷukya Nārāyaṇa* while he was still a youth destroyed the enemy,

புகழ்பெற்ற இராஷ்டிரக்கூடப் பேரரசன் மூன்றாம் கேவிந்தன் (793-814) தமிழ்நாட்டின் மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டிய அரசர்களை வெற்றிகொண்ட செய்தியினை 8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சஞ்சன் செப்பேடு குறிப்பிடுகிறது. அதுவும் திராவிட அரசர்கள் என்றே குறிப்பிடப்பட்டு இருப்பதாக, Epigraphia indica, vol 18 (1925-26) Sanjan plates of Amoghavarsha 1 பக்கம் 241 சான்று பகர்கிறது.[9]

254 EPIGRAPHIA INDICA. [VOL. XVIII

(V. 30). He (then) stood up to destroy the haughtiness of the **Dravila** kings, who were sleepless, anxious, and with minds distracted through deliberations.

கிரேக்க மொழியில் கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த கடல் வணிகம் பேசும் தொன்ம ஆவணமான Periplus of the Erythraean sea (Red Sea) (53-54-55) அன்றைய வாணிப வழிகளைப் பேசும்போது இந்திய நாட்டின் தெற்கே இருந்த சேர மற்றும் பாண்டிய நாடுகளிடையே இருந்த வாணிகத் தொடர்புகளை கூறுகிறது. எரித்ரேயன் கடல் என்பது இன்றைய செங்கடல் ஆகும்,

இந்த ஆவணம் தமிழகத்தை டமிரிக (Damirica) என்றே குறிப்பிடுகிறது. சேரனின் முசிறிப் பட்டிணம் (Muziris) தொண்டி (Tyndis) மற்றும் பாண்டியனின் நெல்சிண்டா (Nelcynda) ஆகிய துறைமுகங்களில் இருந்து மிளகு, இலவங்கம், போன்றவை செங்கடல் துறைமுகங்களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதாகவும் கூறுகிறது.[10]

Damirica means the "country of the Tamils," that is, the Southern Dravidians as they existed in the first century, including particularly the Chira, Pāndya and Chola kingdoms; known in their own records as *Drāvida-desam*

மேலும் அந்த ஆவணத்தின் வழியே Damirica என்றால் தமிழர்களின் நாடு. அதாவது தெற்கில் முதலாம் நூற்றாண்டிலேயே இருந்த திராவிடர்களின் நாடு, சேர, சோழ பாண்டிய என மூன்று நாடுகள்; திராவிட தேசம் எனவும் அழைக்கப்பட்டுள்ளது என்று தெளிவாகிறது.

கிரேக்க தொன்ம ஆவணம் கூறும் வணிகத் தொடர்பை மெய்ப்பிக்கும் விதமாக, புதுச்சேரிக்கு அருகில் உள்ள அரிக்கமேடு, இராமநாதபுரத்தின் அழகன் குளம் ஆகிய கடற்கரை பட்டினங்களும் இருந்தன. இது, இன்றைய அகழ்வாராய்ச்சிகளில் உறுதி செய்யப்பட்டுள்ளது.

கி.பி.150 காலகட்டத்தைச் சேர்ந்த புவியியல் அறிஞரான் டொலமி (Ptolemy) என்ற கிரேக்க மேதை, Geographike Hyphegesis எனும் தனது நூலில் திமிரிகே Herodotus என்றே தமிழகத்தை குறிப்பிடுகிறார். அவருக்கு முன்பே, கி.மு. 425ல் ஹெரடோடஸ் (Herodotus) எனும் வரலாற்று ஆசிரியர் திராவிடம் என்றே குறிக்கிறார்.

extension of the Persian empire under Darius. The trade was by sea and not overland; Herodotus knows the Dravidians (III, 100) only as having "a complexion closely resembling the Aethiopians," and as being "situated very far from the Persians, toward the south, and never subject to Darius." It may also be surmised that a steady demand for pepper existed in China before it arose in Rome, and

214

that this was one reason for the sailing of the junks to the Malabar coast in the 2d century B. C. and probably earlier. In Marco Polo's

திராவிடர்கள் (III, 100) ஏத்தியோப்பியர்களை ஒத்த ஒருநிறம் கொண்டிருப்பதாகவும், பெர்சியர்களிடமிருந்து வெகு தொலைவில், தெற்கே அமைந்திருப்பதாகவும், ஒருபோதும் டேரியஸீக்கு உட்பட்டதில்லை என்று ஹெரடோடஸ், தமிழர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.[10]

நாம் எப்படி யவனம் என்று கிரேக்கத்தை அழைத்தோமோ அது போலவே அவர்கள் திராவிடம் என்று அழைத்தார்கள். இதிலிருந்து திராவிடம் என்பது மாயை அல்ல என்றும், அது தமிழைக் குறித்த திசைச்சொல் என்றும் அறியலாம். "தமிழ்" என்பது ஒரு இயல்புச்சொல் (Endonym), அது குறித்த ஒரு திசைச்சொல்லே (Exonym) "திராவிடம்" ஆகும்.

### ஆரியமும் திராவிடமும் ஒன்றா? ஆரிய - திராவிட பகை கட்டுக்கதையா?

சிந்துவெளி நாகரிக வீழ்ச்சிக்குச் சற்றுப் பின்னரான காலப்பகுதியில் கைபர் கணவாய் வழியாக கால்நடை மேய்ப்போராக நாவலந்தேயம் என்று அழைக்கப்பட்ட இன்றைய இந்தியப் பெருநிலப் பரப்பு அல்லது இந்திய துணைக் கண்டத்திற்குள் வந்து சேர்ந்தவர்களே ஆரியர்கள்.

ஆரியர் என்ற சொல் சமஸ்கிருத மற்றும் ஈரானிய மொழிகளின் அடிப்படையில் அமைந்த ஆர்ய (arya) எனும் அடிச்சொல்லிலிருந்து மருவி வந்ததாகக் கருதப்படுகிறது. ஆர்ய என்ற சொல் அய்ரிய என்ற இரானிய மொழிச் சொல்லுடன் உறவுடைய சொல்லாகும். ஆரியர் (Arya) என்ற சொல் ரிக் வேதத்தில் 36 முறை இடம்பெற்றுள்ளது. "மதக் கருத்துகளைக் கடுமையாகக் கடைப்பிடிப்போர் - உயர்ந்தோர்" என்ற பொருளில் ஆரியர் என்ற சொல் ரிக் வேதத்தில் பயன்படுத்தப்படுகிறது. ரிக் வேத காலத்தில் சைவ-வைணவ மதங்களோ / இந்து என்ற சொல்லோ இல்லை. அப்போதிருந்தது "பிராமணியம்"

*என்ற மதமே. சங்கரச்சாரிய சரசுவதி சுவாமிகள் முதல் சோ வரை இதைக் கூறியுள்ளார்கள். எனவே பிராமணியத்தை உயர்வாகக் கடைப்பிடிப்பவர்களையே ஆரியர்கள் என ரிக் வேதம் கூறுகின்றது.[11]*

*பழந்தமிழ் நூல்கள் ஆரியருக்கும் தமிழருக்கும் (திராவிடருக்கும்) எப்படிப்பட்ட உறவு இருந்தது என்பதை தெளிவாகக்காட்டும்.*

***ஆரியர் அலற தாக்கி பேர் இசை***
***தொன்று முதிர் வடவரை வணங்கு வில் பொறித்து***
***வெம் சின வேந்தரை பிணித்தோன்***
***வஞ்சி அன்ன என் நலம் தந்து சென்மே***

*என்று (அகநானூறு 396:16-19) கூறுகிறது.*

*இந்த அகநானூற்றுப் பாடலில் சேரன் செங்குட்டுவன் சினம்கொண்டு ஆரியர்களை அலறும்படித் தாக்கி, பழமையான வடமலை இமயத்தில் தன்னுடைய வளைந்த வில் சின்னத்தைப் பொறித்தான் என்கிறது. இப்பாடலின்படி இமயமலைச் சாரலில் அப்போது ஆண்டவர்கள் ஆரியர் எனக் குறிப்பிடப்படுகிறார்கள்.*

***மாரி அம்பின் மழை தோல் சோழர்***
***வில் ஈண்டு குறும்பின் வல்லத்து புற***
***மிளை ஆரியர் படையின் உடைக என்***
***நேர் இறை முன்கை வீங்கிய வளையே***
***(அகநானூறு 336: 20-23)[12]***

*இந்த அகநானூற்றுப் பாடலில் சோழரது விற்படை செறிந்துகிடக்கும் அரணையுடைய வல்லம் என்ற ஊருக்கு வெளியேயுள்ள காவல்காட்டில் வந்தடைந்த ஆரியரின் படைகள் சோழர் அம்புகளை எதிர்த்து நிற்க முடியாமல் தோற்றோடிய செய்தி சொல்லப்படுகிறது.*

***வடவாரிய படை கடந்து***
***தென்தமிழ் நாடு ஒருங்கு காணப்***
***புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்***
***அரசு கட்டிலிற் றுஞ்சிய பாண்டியன்***
***நெடுஞ்செழியன் - என்கிறது***
***(சிலப்பதிகாரம்)[13]***

*இந்தச் சிலப்பதிகார பாடலில், கடைச் சங்ககால பாண்டிய மன்னர்களில் ஒருவரான பாண்டிய நெடுஞ்செழியன், வடநாட்டு ஆரிய மன்னர்களைப் போரில் வென்றதால் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்ற சிறப்புப்பெயரைப் பெற்றான் என்ற செய்தியையும் நாம் அறியமுடிகிறது.*

*சங்ககாலப் பாடல்களில் வடக்கேயிருந்தவர்களை ஆரியர் எனக் குறிப்பிடுவதுடன், தமிழருக்கும் ஆரியர்களுக்குமிடையே தீராத பகை காணப்பட்ட செய்திகளும் கூறப்படுகின்றன. ஆரியர்களைத் தோற்கடித்த செய்திகளை இலக்கியங்கள் சொல்கின்றன என்றால், எந்த ஒரு திசைச் சொல் குறித்தும் தனி இலக்கணம் வகுக்காத தொல்காப்பியர் வடமொழியின் ஆபத்து குறித்து விழிப்பாய் இருக்கும்படி தனி இலக்கணம் வகுத்துள்ளார்*

***வடசொல் கிளவி வாடா எழுத்து ஓரீஇ***
***எழுத்தொடு புணர்ந்து சொல் ஆகுமே***
***சிதைந்தன வரினும் இயைந்தன***

*வரையார் என்கிறது தொல்காப்பியம், எச்சவியல் 5, 6[14]*

*அதாவது வடஎழுத்துக்களைத் தமிழில் எழுத வேண்டிய கட்டாயம் வந்தால் வட எழுத்துக்களைப் புறந்தள்ளிவிட்டுத் தமிழில் என்ன எழுத்து இருக்கிறதோ, அதற்கு இயைந்து வந்தால் மட்டுமே பயன்படுத்துங்கள், வடமொழி சிதைந்தாலும் பரவாயில்லை. அதற்கு இயைந்து எழுதாதே என்பதே அர்த்தம்,*

*ஆரியமும் திராவிடமும் ஒன்றே, ஆரிய திராவிட சண்டை எல்லாம் மாயை என்று கூறுகிறவர்கள் சங்க இலக்கியங்களையும்*

தமிழ் இலக்கணத்தையும் கொஞ்சம் ஆழ்ந்து படித்தால் உண்மைநிலை அறியலாம்.

**திராவிடம் சமஸ்கிருத சொல்லா?**

சீன மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட பௌத்த நூலான "லலிதாவசுத்திர" (Lalita-vistara) என்னும் நூல் குறிப்பிடும் "திராவிட லிபி" என்பது தமிழ் எழுத்துகளைக் குறிக்கிறது. இதுவே "திராவிடம்" என்ற சொல் தமிழ்மொழியைக் குறிப்பதற்கான நேரடியான முதலாவது சான்றாகும்.

சமயவங்கா சுத்தா (Samavayanga Sutta, 300 BCE) மற்றும் பன்னவன சுத்தா (Pannavana Sutta, 168 BCE) என்ற சமண நூல்களில் அக்காலத்தில் வழக்கில் இருந்த 18 மொழிகளின் பட்டியலில் சமஸ்கிருதம் குறிப்பிடப்படவில்லை.

அதில் "தமிலி" / "தமிழி" (Damilli) ஒரு எழுத்து வடிவமாகக் குறிப்பிடப்படுகிறது. இதனாலேயே பிற்காலத்தில் கமில் சுவெலபில் (Kamil Zvelebil) என்ற அறிஞர், "தமிலி" / "தமிழி மற்றும் திராவிடலிபி" ஆகியவை தமிழ் எழுத்துக்கு ஒத்தவை, "தமிழ்" என்ற சொல்லைக் குறிக்கும் ஒரே சொற்களாக "தமிழி", "திராவிடம்" என்பவற்றைக் குறிப்பிடுகின்றார்.[14] எனவே "திராவிடம்" என்பது சமஸ்கிருதச் சொல் அல்ல என்பது தெளிவாகின்றது.

**தமிழம் என்பதே சமஸ்கிருதத்தில் திரவிடம்**

ஆரியர்களின் சமஸ்கிருத மொழியில் "ழ" என்னும் எழுத்து இல்லை. தமிழ்ச் சொற்களை சமஸ்கிருதச் சொல்லாக்க ஆரியர்கள் கையாளும் சில வழிமுறைகளில் ஒன்று, தமிழ்ச்சொல்லின் முதல் எழுத்து உயிர்மெய் எழுத்தாக இருந்தால், உயிர் எழுத்தை நீக்கிவிட்டு உள்ள மெய்-எழுத்தோடு, "ர" என்னும் எழுத்தைச் சேர்த்து புணர் எழுத்தாக மாற்றுதல் செய்து புதிய சமஸ்கிருத எழுத்து உருவாக்கும் முறை.

உதாரணமாக, நகல் எடு என்பதற்குத் தமிழில் படி எடு என்போம். இதில், படி - என்னும் சொல்லில் முதல் எழுத்து ப = ப்+அ. "அ" வை நீக்கிவிட்டு, "ர"- வைச் சேர்த்தால், "ப்ர" வரும். "ப்ர" உடன் "டி" சேர்த்தால், "ப்ரடி" என்பது "ப்ரதி" என்று மாறும்.

அதுபோல, தமிழம் எனும் சொல்லின் முதலெழுத்து, த - "த்ர" என்றும் "த்ர" உடன் "மிழம்" சேர்த்தால், "த்ரமிழம்". சிறப்பு ழ-கரம் இல்லாததினால் த்ரமிளம். பின்னர் அது திரிந்து த்ரமிடம் ஆகியது. சமஸ்கிருத வழக்கப்படி, "ம' எளிதாக "வ' ஆகிவிடும். போலிக்குப் போலி- த்ரவிடம்,

பவளம் என்பது ப்ரவளம் என்று வடமொழியில் திரிந்ததுபோலவே தமிழம் (தமிழ்) எனுஞ் சொல் த்ரமிளம், த்ரமிடம், த்ரவிடம் என்றாகி, பின் தமிழில் வந்து வழங்கும்போது மெய் முதலெழுத்தாக விதி இல்லாததால் திரவிடம், திராவிடம் என்று தமிழில் வழங்கும் என்றும், ஆகையால் தமிழினின்றே திராவிடம் எனுஞ்சொல் தோன்றிற்று -திரவிடத்தாய் - பக்கம் 8[15]

கிரேக்கம், உரோமானியம், எகிப்து என நமது நட்பு இனங்கள் தமிழ், தமிழம், தமிழர் என்பதைக் குறிக்க அவர்கள் மொழியில், த்மிர, த்ரமிள, த்ரவிட, திராவிடர் என்று அழைத்தார்களோ அது போலவே ஆரியர்களும் தமிழம், தமிழர்

என்று குறிக்க திராவிடம், திராவிடர் என்ற திசைச் சொல்லை பயன்படுத்தினார்கள் என்பது தெளிவாகிறது.

### திராவிடம் என்றால் தெலுங்கா?

குமரிலபட்டர் (Kumarila Bhatta) என்பவர் 7ம் நூற்றாண்டில் எழுதிய "மீமாம்சா சுலோக வார்த்திகம்" என்ற நூலில் திராவிடம் என்ற சொல் தமிழைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகின்றது. தெலுங்கு மொழி கிளைத்தபோது, அதை ஆந்திர திராவிட பாஷை என்று அழைக்க ஆரம்பித்தனர் என்று கூறுகிறார் வடநூலார் குமரில பட்டர்.

தெலுங்கில் கலந்துள்ள தமிழினைக் குறிக்க, தமிழைக் குறித்த திசைச்சொல் திராவிடம், சமஸ்கிருதம் மற்றும் தெலுங்குக் கலப்பினைக் குறிக்க ஆந்திரம் என்ற சொல், ஆந்திரம் என்பது ரிக் வேதத்தில் ஐத்தரேய பிராமணத்தில் வரும் ஓர் இனக்குழு.[27]

தமிழும் தெலுங்கும் இயல்பிலே ஒத்து செல்பவை. ஆனால் தெலுங்கோடு சமஸ்கிருதம் கலக்ககலக்க அது தமிழைவிட்டு வெகுதூரம் விலகிச் சென்றது. இங்கு பாவாணர் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. குமரிலபட்டர் காலத்தில் மலையாளம் பிரிந்து போகவில்லை என்பதால், தெலுங்கு ஒழித்த ஏனைய கன்னடம், துளு, தமிழ் ஆகிய மொழிகளையே திராவிடம் என்று குமரிலபட்டர் குறிப்பிடுவதாகப் பாவாணர் கூறுகிறார்.

தெலுங்கினையும் சேர்த்துக் குறிக்க ஆந்திர திரவிட பாஷை" என்னும் இணைமொழிப் பெயரால் அழைத்தனர் வடநூலார் எனவும் பாவாணர் திராவிடத்தாய் எனும் நூலின் 15வது பக்கத்தில் குறிப்பிடுகின்றார்.[16]

ஆந்திர= தெலுங்கு, திராவிட= தமிழ்+ கன்னடம்+ துளு.

கி.பி.13 பால்குரி சோமநாதப் புலவர் எழுதிய தெலுங்கு காவிய நூலான பண்டீதராத்ய சரிதம் என்னும் நூலில், அருதெந்னட்லியம் பரவ தேசம்பு வருசயி த்ராவிட பாஷா சாங்கமுக என்று ஸ்ரீ சைலத்துக்குச் செல்லும் தமிழகப் பக்தர்கள் தமிழ் மொழியில் பாடிக்கொண்டு சென்றார்கள். ஒரு தெலுங்கர், தான் எழுதிய தெலுங்கு மொழியில் தமிழைத் திராவிட பாஷா என்கிறார்.

கி.பி.14.ஆம் நூற்றாண்டில் கங்காதேவி எழுதிய "மதுரா விஜயம்" என்னும் சமஸ்கிருத நூல். தமிழகத்தை "த்ராவிடதேசம்" என்று கூறுகிறது. கங்காதேவி ஒரு தெலுங்கர். அவர் தமிழகத்தைத் திராவிட தேசம் என்கிறார்.

கி.பி.10. புலவர் நாகவர்மா எழுதிய சாந்தோம்பதி என்னும் கன்னடக் கவிதை நூலில் தமிழை திராவிடந்திர பாஷா என்கிறார். ஒரு கன்னட நூல் தமிழ் மொழியை இவ்வாறு கூறுகிறது. எனவே தான் திராவிடம் என்பது தெலுங்கினைக் குறிப்பது என்ற பொய்ப் பரப்புரை இங்கு அடிபட்டுப் போகிறது.

### திராவிடர்கள் பார்ப்பனர்களா?

திராவிடர்கள் என்பது பார்ப்பனரைக் குறிக்கும் சொல் என்றும் சிலர் வாதிடுவது உண்டு, திருஞானசம்பந்தரைத் "திராவிட சிசு" என ஆதிசங்கரர் அழைத்த நிகழ்வினைக் குறிப்பிடலாம். சம்பந்தர் தமிழில் பாடி இறைவனை வழிபட்டதால் தான் ஆதிசங்கரர் அவரைத் "திராவிட சிசு" என அழைத்திருந்தார். எனவே இங்கும் "திராவிட" என்ற சொல் தமிழ் குறித்தே பயன்படுத்தப்படுகிறது.

*12 ஆம் நூற்றாண்டில் காஷ்மீரத்தில் சமஸ்கிருத மொழியில் இயற்றப்பட்ட ராஜதரங்கிணி எனும் நூல், தென்னாட்டு பிராமணர்களை, திராவிட பிராமணர்கள் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. தெற்கே இருந்து வடக்கே வாழத்தொடங்கிய பிராமணர்களை இன்றளவும் திராவிட பிராமணர்கள் என்று சொல்லும் வழக்கம் வாரணாசி போன்ற தலங்களில் இருந்து வருகிறது.*

*திராவிடர்கள் வாழ்ந்த தென்னிந்தியப் பகுதியில் வாழ்ந்த பார்ப்பனர்கள் என்பதைக் குறிக்கவே அவர்கள் தங்களைத் திராவிட் என்று அழைத்துக்கொண்டனர். இந்தியா முழுக்கப் பார்ப்பனர்கள் பரவி வாழ்ந்த நிலையில் தெற்கே தமிழர்கள் மிகையாக வாழும் திராவிடப் பகுதியில் வாழும் பார்ப்பனர் என்று தங்களை வேறுபடுத்திக் காட்டவே "திராவிட்" என்று அழைத்துக் கொண்டனர். இங்கு திராவிடம் என்பது இடத்தைக் குறிக்கிறது; இனத்தைக் குறிப்பதல்ல.*

*பார்ப்பனர்கள் திராவிட பகுதியிலும் வாழ்ந்தார்கள் என்பதை* Britannnica Ensyclopedia of World Religions *(பக்கம் 142) உறுதி செய்கிறது. பார்ப்பனர்கள் இந்தியாவில் பரவி வாழ்ந்த முக்கிய நிலப்பகுதிகள். வடக்கில் ஐந்து நிலப்பகுதிகள் (சரஸ்வத், கௌடா, கன்குப்ய, மைதிலி மற்றும் உத்கல) மற்றும் தெற்கில் ஐந்துநிலப்பகுதிகள் (மகாராஸ்டிரா, ஆந்திரா, திராவிட, கர்நாடக மற்றும் மலபார்). இங்குக் கவனிக்க வேண்டியது, ஆந்திரம், கர்நாடகம், கேரளாவைக் குறிக்க மலபார் என்று நிலப்பகுதிகளைத் தனித்தனியாகத் குறிப்பிட்டுச் சொல்லும் போது, தமிழகத்தை மட்டும் திராவிடம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.[17] இதனால் திராவிட் என்கிற பின்னொட்டைப் பார்ப்பனர்கள் பயன்படுத்துவதைக்கொண்டு பார்ப்பனர்கள் திராவிடர்கள் என்று கூறுவது மிகவும் அபத்தம் என்பது தெளிவாகிறது.*

pure.
The Brahmins are divided into 10 main territorial divisions, 5 of which are associated with the north and 5 with the south. The northern group consists of Sarasvatī, Gauḍa, Kannauj, Maithil, and Utkal Brahmins, and the southern group comprises Mahārāshtra, Āndhra, Drāviḍa, Karṇāṭa, and Malabār Brahmins.

### தமிழும் திராவிடமும் ஒன்றே

*பாண்டியர் செப்பேடுகள் 10 எடுத்துக் கொள்வோம், அதில் திருநெல்வேலி மாவட்டம் கோவில்பட்டித் தாலுகாவிலுள்ள தளவாய்புரம் எனும் கிராமத்தின் புறவெளியில் கிடைத்த பாண்டியன் பராந்தகன் வீரநாரயணின் தளவாய்புர சாசனம். இது 7 செப்பேடுகளைக் கொண்டது. காலம் கிபி 9-ம் நூற்றாண்டு. இது தமிழ் மற்றும் சமஸ்கிருதம் ஆகிய இரண்டு பகுதிகளை உள்ளடக்கியுள்ளது.*

*செப்பேட்டின் வாசகங்களை இயற்றிய ஒருவரை வடமொழிப்பகுதி (சமஸ்கிருதம்) "பாண்டிய த்ரமிடர்" என்கிறது. அவரையே தமிழ்ப் பகுதி தமிழ் பாண்டியன் என்கிறது. ஆக வடமொழியில் த்ரமிட என்றால் தமிழ் என்பது உறுதியாகிறது. அதே செப்பேட்டில் வாசகங்களைச் செதுக்கிய தச்சரை வடமொழியில் (சமஸ்கிருதம்) "திரமிளா பரணன்" என்றும், தமிழ்ப்பகுதியில் தமிழர் பரணன் என்றும் செப்பேடு கூறுகிறது.*

பாண்டிய த்ரமி ர்களுக்கு அலங்காரமானவனும், கருமார் கூட்டத்தில் முக்கியனும், சிவபாதத் தாமரையைத் தியானிப்பவனுமான கவி இந்தப் பிரசஸ்தி சேஷத்தை இயற்றினன்.

இதற்கு ஆணத்தி தமிழ்ப் பாண்டியனிடத்தில் அதிகாரி, பொன்னால் செய்த அணிகலன்களை அணிந்தவன், விசாலமான, பூக்கள் அணிந்த, அழகிய மார்பை உடையவன், சோலைகளையுடைய புல்லூரில் விளங்குகின்ற அந்தணன், வயல்களிலும் குளங்களிலும் நீர் பாய்கின்றதும்

*ஆக, த்ரமிட, திரமிளா என்னும் வடமொழிச் சொற்கள் தமிழ் மற்றும் தமிழர்களையே குறிப்பிடுகிறது என்பது தெளிவாகிறது.*

ஆந்திராவின் கடப்பா மாவட்டத்தில் இராமேஸ்வராவில் உள்ள இராமலிங்கேஸ்வரர் கோவிலின் தூண் கல்வெட்டில், *3*ஆவது பகுதியானது, பல்லவர்களைத் திராவிடர்கள் என்றே குறிப்பிடுகிறது. இதன் காலம் கி.பி.*9*ஆம் நூற்றாண்டு. சான்றாக, EPIGRAPHIA INDICA Vol 36, Rashtrakuta Inscription From Ramesvara பக்கம் ***62*** மற்றும் ***66***ல் காணலாம்.[18]

62 EPIGRAPHIA INDICA [Vol. XXXVI

built by the hero of our eulogy. Kāñchī is indirectly mentioned probably as the capital of the Dravidas (Pallavas). The well known holy places Śrīparvata and Vāraṇasi (Vāraṇasī) are mentioned in the imprecatory section on the lower part of the fourth side of the pillar. We are not sure about the location of the gift village called Nagadāru.

66 EPIGRAPHIA INDICA [Vol. XXXVI

10 kshitāsu karuṇā duraushṭēshu daṇḍam [chiram]
11 saubhāgyam vanitāsu **Krishṇa**-nṛipatēsvara-
12 [rvva]tra sarvvā(rvve)=rttha-dam(dāḥ) || 20 || Śrī-**Raṭṭakandarppa**-
13 [nṛi]pēṇa tēn=āchirē(ra)-prabhuktaṁ(ktē) **Draviḍaiḥ** pri-
14 yāyāḥ [|*] kāñchy-āspadē dakshiṇa-dig-ramaṇyāḥ

மேவார் ராச்சியத்தின் ராணாவான, ராணா கும்பா பற்றிய செய்திகள் கூறும் கும்பல்கர்க் கோட்டை கல்வெட்டுகள், ராணா கும்பாவென்ற நாடுகளைப் பற்றி குறிப்பிடுகையில், திராவிடம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. சான்றாக, EPIGRAPHIA INDICA Vol 24, FIRST AND THIRD SLABS OF KUMBHALGARH INSCRIPTION பக்கம் ***309***ல் காணலாம். இதன் காலம் கி.பி.*14*ஆம் நூற்றாண்டு.[19]

No. 44] FIRST AND THIRD SLABS OF KUMBHALGARH INSCRIPTION : V. S. 1517. 309

மதுரைக்கு அருகில் உள்ள திருப்புவனம் என்ற ஊரில் அமைந்துள்ள புட்பவனேசுவரர் கோவிலில் கிடைத்துள்ள தாமிரத் தகடுகள் பாண்டிய மற்றும் சோழர்களின் உறவைக் குறிப்பிடுகையில், அவர்களை திராவிடர் என்றும் குறிப்பிடுகிறது. சான்றாக, EPIGRAPHIA INDICA Vol 27, SEALS OF TIRUPPUVANAM PLATES பக்கம் ***124***ல் காணமுடியும்.[20]

No. 22.–SEALS OF TIRUPPUVANAM PLATES
(1 Plate)
K. V. SUBRAHMANYA AIYAR, COIMBATORE

காகதீய அரசன் கணபதி, மூன்றாம் ராஜராஜ சோழனின் மகனான குலோத்துங்க இராஜேந்திரனை (கி.பி.***1246-1279***) வென்று யானைகளைப் பரிசாகப் பெற்றுச் சென்ற செய்தியினைக் கூறும் நயனப்பள்ளி கல்வெட்டு, குலோத்துங்க இராசேந்திரன் ஆண்ட பகுதியினை திராவிள மண்டலம் என்று குறிப்பிடுகிறது. சான்றாக, *12*ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த EPIGRAPHIA INDICA Vol 27, NAYANAPALLE INSCRIPTION OF GANAPATIDEVA ல் பக்கம் ***195-197***ல் காணலாம்.[21]

No. 35] NAYANAPALLE INSCRIPTION OF GANAPATIDEVA 195

TRANSLATION

கி.பி.*6* முதல் *9* ஆம் நூற்றாண்டுக்குள் *12* ஆழ்வார்களால் இயற்றப்பட்ட *4* ஆயிரம் தமிழ் பாசுரங்கள் அடங்கிய பக்தி இலக்கியம் நாலாயிரத் திவ்விய பிரபந்தம். இது தற்போதைய வரிவடிவில் நாதமுனியால் ***9-10*** ஆம் நூற்றாண்டுகளில் தொகுக்கப்பட்டது. இது திராவிட வேதம் என்று அழைக்கப்படுகிறது. இதற்கான சான்று, EPIGRAPHIA INDICA Vol 5 ல் ***73*** ஆம் பக்கத்தில் உள்ளது.[22]

4 The [illegible], which is called the "Dravida Vēda," is a collection of Tamil poems written by the Āḻvārs. The Rāmānuja Vaishnavas, especially those of the Tengalai sect, have a greater regard for Tamil which

பில்ஹணர் என்ற வடமொழிக் கவிஞர், சோழர்களின் சரித்திரம் பற்றி எழுதிய விக்கிரமாங்கதேவ சரிதம் என்ற நூலில் சோழனின் படை திராவிடப்படை என்றும் சோழமன்னன் "திராவிட மன்னன் என்றும் குறிப்பிடுகிறது.

இந்திய நாட்டின் தேசியகீதத்தில் அதன் மூலமொழியான பெங்காலி மொழியில் திராவிட என்பது திராபிர என்று தான் இருக்கிறது. ஆனால் நாம் திராவிட என்று பாடுகிறோம்.

காலத்தால் திராவிடத்துக்கான அடுத்த சான்றாக, சமண முனிவரான வச்சிரநந்தி கி.பி.470 இல் (CE 470) ஏற்படுத்தப்பட்ட "திராவிட சங்கம்" என்பதைக் கூறலாம்.

வச்சிரநந்தி நிறுவிய சங்கத்திலும் தமிழ் சார்ந்த நூல்கள் இயற்றப்பட்டிருந்தன. (இவை சங்ககால நூல்களன்று, அவற்றுக்குப் பின்னரானவை), இதனால் இந்த திராவிட சங்கத்தினைத் "தமிழ்ச் சங்கம்" என்றும் அழைப்பர். சங்ககாலச் தமிழ்ச் சங்கம் வேறு, இது வேறு. எனவே வச்சிரநந்தி நிறுவிய சங்கமும் "தமிழ்ச்சங்கம்", "திராவிட சங்கம்" என இரு பெயர்களிலும் அழைக்கப்பட்டமையிலிருந்து தமிழ், திராவிடம் ஆகிய இரண்டும் ஒன்றே என்பது தெளிவாகின்றது.

மேலும் சான்றாக, தாயுமானவர் பாடல் ஒன்றினைப் பார்ப்போம். வடமொழியிலே

> **வல்லா னொருத்தன் வரவுந் திராவிடத்திலே**
> **வந்ததா விவரிப்பேன்;**
> **வல்ல தமிழறிஞர் வரி னங்ஙனே வடமொழியின்**
> **வசனங்கள் சிறிதுபுகல்வேன் –**
> **(தாயுமானவர் பாடல்கள். சித்தர்கணம் (10.3)[23]**

மேலுள்ள பாடலிலும் தமிழ், திராவிடம் ஆகிய இரண்டும் ஒன்றே என்ற பொருளைக் காணலாம்.

மேலும் பாவேந்தர் பாரதிதாசன், தமிழுக்கும் அமுதென்று பேர் எனும் நூலில், திராவிடம் எனும் பாடலில் தமிழே திராவிடம் என்று திரிந்தது என்று மிகத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

> **உரைத்த இவை கொண்டே உணர்க தமிழம்**
> **திராவிடம்என் றேதிரிந்த தென்று! - திராவிடம்**
> **ஆரியர்வாய்ப் பட்டுத் திரிந்தாலும் அந்தச் சொல்**
> **ஆரியச்சொல் ஆமோ அறி**
> **(- தமிழுக்கும் அமுதென்று பேர் நூல், பாடல் திராவிடம்[24]**



பண்டிதர் கிரையர்சன், ஒரு மொழி ஆராய்ச்சியாளர், 1891-ல் ஆராய்ச்சிக்காக விண்ணப்பித்து 1894-ல் ஆராய்ச்சியை தொடங்கி 30 ஆண்டுகள் ஆராய்ந்து 1928-ல் வெளியிடப்பட்ட அவரது இந்திய மொழியாராய்ச்சி (Linguistic Survey of India) என்னும் நூலில் தமிழம் என்பதே த்ரவிடம் என்பதன் மூலம் என்று சொல்கிறார்,[25]

Name of the family.

The name Dravidian is a conventional one. It is derived from the Sanskrit द्रविड Draviḍa, a word which is again probably derived from an older *Dramiḷa*, *Damiḷa*, and is identical with the name of Tamil. Compare p. 298 below. The name Dravidian is, accordingly, identical with Tamulian, which name has formerly been used by European writers as a common designation of the languages in question. The word Draviḍa forms part of the denomination *Āndhra-Drāviḍa-bhāshā*, the language of the Āndhras (*i.e.*, Telugu) and Draviḍas (*i.e.*, Tamiḻians) which Kumārila Bhaṭṭa (probably 7th century A.D.) employed to denote

ஸ்டென் கொனோவ் எனும் மொழியியல் வல்லுநர் தமிழ் என்னும் சொல்லிலிருந்து தான் திராவிடம் என்னும் சொல் தோன்றியதாகக் கருதுகிறார்.[27]

“the Sanskrit Dramica, “Dravidian,” is borrowed by Tamil under the form Tirāmiḍa. Dramiḍa, which also occurs as Draviḍa, is in its turn developed from an older Damiḍa, which is identical with the word Tamiḍ, Tamil.

Sanskrit word *brāhmaṇa*, "a Brahmin," becomes *barāmaṇa* in Kanarese and *pirāmaṇa* in Tamil; the Sanskrit *Dramiḍa*, "Dravidian," is borrowed by Tamil under the form *Tirāmiḍa*. *Dramiḍa*, which also occurs as *Draviḍa*, is in its turn developed from an older *Damiḷa*, which is identical with the word *Tamiḻ*, Tamil.

- 1911 Encyclopedia Britannica, Volume 8, Dravidian by Sten Konow

தமிழம் என்ற நம்முடைய ஒரே சொல் த்ரமிர, த்ரமிரிக்க, த்ரமிளம், த்ரமிடம், த்ராமிடம், த்ராவிடம் என்று பல்வேறு திசை ஒலிப்புச் சொற்களாக நின்றாலும் அவை யாவும் தமிழ், தமிழர், தமிழம் என்பவற்றைக் குறித்த சொற்களே என்று தெளிவாகிறது.

மேற்கூறிய தரவுகளின் அடிப்படையில் திராவிடமும் தமிழும் ஒன்றே என்பதை ஐயமின்றி அறியலாம்.

## குறிப்பு ஆவணங்கள்

1. தொல்காப்பியம், எச்சவியல் 4,5,6.
2. நன்னூல் 273
3. மொழி ஞாயிறு தேவநேயப்பாவாணர், ஒப்பியன் மொழிநூல்2, பக்கம் 15.
4. Epigraphia Indica. Vol. 20, Published by The Director General, Archeologial Survey of India, 1983, பக்கம் 79
5. The Indian Antiquary a journal of oriental research Vol.IX, 1880, Edited by Jas, Burgess பக்கங்கள் 97 - 98
6. EPIGRAPHIA INDICA Vol 20, PRAKRIT INSCRIPTIONS FROM NAGARJUNIKONDA, பக்கங்கள், 89, மற்றும் 22.
7. Journal of The Andhra Historical Research Society Volume x, பக்கங்கள் 53, 54
8. Epigraphia Indica. Vol. 36 பக்கங்கள் 36,62, 66, 193
9. Epigraphia indica, vol 18 (1925-26) Sanjan plates of Amoghavarsha 1, பக்கங்கள் 241,254
10. Periplus of the Erythraean sea, Translated from The Greek and Annotated By Wilfred H. Schoff,A,M பக்கங்கள் 44, 205, 213
11. திராவிடம் என்றால் என்ன? வி.இ.குகநாதன்
12. அகநானூறு 396:16 - 19, 336: 20 23
13. சிலப்பதிகாரம்
14. https://wiki2.org/en/Tamil-Brahmi
15. திராவிடத்தாய், பக்கங்கள் 8, 9, 15.
16. காலந்தோறும் திராவிடம் என்னும் சொல்லாட்சி தமிழர் அடையாளப் பின்னணி - முனைவர் ச. சீனிவாசன்.
17. Britannnica Encyclopedia of World Religions பக்கம் 142
18. பாண்டியர் செப்பேடுகள் பத்து. சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். 1999, பக்கங்கள் 90, 91, 136, 139.
19. Epigraphia indica Vol 24, FIRST AND THIRD SLABS OF KUMBHALGARH INSCRIPTION, பக்கம் 309
20. Epigraphia indica Vol 27, SEALS OF TIRUPPUVANAM PLATES பக்கம் 124
21. Epigraphia indica Vol 27, NAYANAPALLE INSCRIPTION OF GANAPATIDEVA பக்கங்கள் 195 - 197
22. Epigraphia indica Vol 5, பக்கம் 73
23. தாயுமானவர் பாடல்கள், சித்தர்கணம் (10.3)
24. பாவேந்தர் பாரதிதாசன், தமிழுக்கு அமுதென்றுபேர் நூல், பாடல் திராவிடம்.
25. Linguistic Survey of India, Volume 4, G.A. Grierson, C.I.E, PhD. பக்கம் 277
26. 1911 Encyclopedia Britannica, Volume 8, Dravidian by Sten Konow, பக்கம் 551.
27. அறியப்படாத தமிழ்மொழி - முனைவர் கண்ணபிரான் இரவிசங்கர்.